

# புது நம்பிக்கை

பெறுவோம்! கொடுப்போம்!!

மலர் – 1 ஜனவரி - மார்ச் - 2017 இதழ் – 1

... அந்த வீடு ஜீவனுள்ள
தேவனுடைய சபையாய்ச்
சத்தியத்துக்குத் தூணும்
ஆதாரமுமாயிருக்கிறது.
(1 தீமோ. 3:15)



# வேதாகமம் வழங்கி வெளிச்சம் ஏற்றுவோம்

## ஒரு குடும்பம் – ஒரு வேதாகமம்





சபையின் மாணவர்களுக்கு இலவச வேதாகமம் வழங்குதல் (ஆந்திரா)

உம்முடைய வசனம் என் கால்களுக்கு தீபமும் பாதைக்கு வெளிச்சமுமாயிருக்கிறது. (சங். 119:105). தேவனுடைய வார்த்தை நமது வாழ்விற்கு வழிகாட்டும் ஒளி. அந்த வெளிச்சத்தை கண்டடைந்த நாம் அந்த உன்னத வெளிச்சத்தை பிறருக்கும் காட்ட ஒரு அரிய வாய்ப்பு.

நமது நாட்டில் இன்னும் வேதாகமம் இல்லாத எத்தனையோ ஜனங்கள் மிஷனரி பணிக்களங்களில் உள்ளனர். ''ஒரு குடும்பம் – ஒரு வேதாகமம்'' திட்டத்தின் மூலம் நமது குடும்பம் சார்பாக மிஷனரி பணிக்களங்களில் வாழும் ஏழை கிறிஸ்தவ குடும்பத்துக்கு அவரது தாய்மொழியில் ஒரு வேதாகமம் வழங்க முன்வருவோம்.

ஒரு வேதாகமத்தின் விலை ரூ. 160/– மட்டும். (கட்டி அட்டை பையின் ரூ.175/–)

வேதாகமம் பரிசளிக்க விரும்புவோர் தொடர்பு கொள்ள வேண்டிய எண்: 7502071054

---

# மிஷனரிகளுக்கு மருத்துவ உதவி செய்தல்



மிஷனரி பணிக்களங்களில் பணியாற்றும் பணியாளர்கள் தேவ ராஜ்யத்தின் மகிமையான பணியை செய்து வருகின்றனர். அவ்வாறு பணியாற்றும்போது மிஷனரிகள் சந்திக்கும் இன்னல்கள், இடர்பாடுகள் ஏராளம் ஏராளம். இத்தனை இடர்களுடன் சில மிஷனரிகள் உடல் ஆரோக்கியம் சார்ந்த பல்வேறு நோய் நொடிகளுக்கு ஆளாகின்றனர். அவ்வித நோய்கள் தாக்கும்போது சில மிஷனரிகள் உரிய சிகிட்சைக்கான நிதி வசதியின்றி தவித்து வருகின்றனர்.

இவ்வித இக்கட்டான வேளைகளில் மிஷனரிகளின் சிறந்த மருத்துவ சிகிட்சைக்கு புதுநம்பிக்கை மிஷன் உதவி செய்து வருகிறது. ஏழை மிஷனரிகள் மருத்துவ சிகிட்சைக்கு கருத்துடன் ஜெபிப்போம். உதவ முன்வருவோம்.

மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ள: 9442935233

Address:-
Newhope Mission
75/33, Isaac Street,
Nagercoil - 629001

# புது நம்பிக்கை

பெறுவோம்! கொடுப்போம்!!

மலர் - 1 ஜனவரி - மார்ச் - 2017 இதழ் - 1


## உள்ளே . . .




ஆசிரியர்

S. மோசஸ் ராஜ்

ஆசிரியர் குழு

C. பால் வென்னட் சிங்

ஆ. ரவி குமார்

S. வசந்த நேசம்

முகவரி :

**புது நம்பிக்கை**

75/33, ஐசக் தெரு,

நாகர்கோவில் - 629 001

தொடர்பு எண்கள்.

7502071054

9442935233

9789183072



தனி பிரதி. 10/–

ஆண்டு சந்தா. 100/–

ஆயுள் சந்தா. 2000/–

தனி சுற்றுக்கு மட்டும்


*கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே!*
*இயேசு கிறிஸ்துவின் இனிய நாமத்தில் வாழ்த்துக்கள்.*

ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் மட்டற்ற கிருபையால் இப்புதிய ஆண்டில் புது நம்பிக்கையுடன் தங்களை சந்திப்பதில் பெரு மகிழ்ச்சி அடைகிறேன்.

2002–ஆம் ஆண்டிலிருந்து பல்வேறு மிஷனரி இயக்க பணிக்களங்களுக்கு ஐநூறுக்கும் மேற்பட்ட மிஷனரிகளை பயிற்சி கொடுத்து அனுப்ப தேவன் உதவி செய்து வந்தார். எமது பயிற்சி பெற்ற கர்த்தரின் ஊழியர்கள் இந்திய பணிக்களங்களில் பணி செய்வதை கண்டு மகிழ்ச்சியுடன் கர்த்தருக்கு நன்றி செலுத்துகிறோம். அதே நேரத்தில் பல மிஷனரிகள் பணிக்களங்களில் பல்வேறு இன்னல்களின் மத்தியிலும் நெருக்கடியிலும் பணியாற்றுவதை காண முடிகிறது. மிஷனரிகளின் குடும்பங்களில் மருத்துவ கிகிட்சை சார்ந்த தேவை எழும்போது மிஷனரிகள் படும் வேதனைகளுக்கு அளவே இல்லை.

இப்படி இன்னல்படும் மிஷனரிகளின் குடும்பங்களுக்கு உதவி செய்யும் நோக்கத்துடன் புதுநம்பிக்கை மிஷன் செயல்பட்டு வருகிறது. மிஷனரிகளுக்கு இதய அறுவை சிகிட்சை , கேன்சர், விபத்து முதலிய சிகிட்சைகளுக்கு இயன்றவரை புது நம்பிக்கை மிஷன் உதவி செய்து வருகிறது. மேலும் மிஷனரி பிள்ளைகளின் படிப்புக்கு உதவி வருகிறோம்.

தேவ கிருபையால் ஜனவரி 28 அன்று ஆந்திர மாநிலத்தில் சபை அர்ப்பணம் மகிமையாய் நடந்தேறியது. 300–க்கும் மேற்பட்ட விசுவாசிகள் ஆராதனையில் கலந்து கொண்டனர். அத்துடன் பெத்தபுரம், ரௌத்தலபுடி போன்ற பணிக்களங்களை பார்வை இட்டு அங்கு பணி செய்து வரும் மிஷனரிகள் கிதியோன், எலிசா முதலியோரை சந்தித்து உற்சாகப்படுத்த தேவன் உதவினார்.

தேவ கிருபையால் ஊழியங்கள் விரிவடைந்து வருகிறது. கர்த்தருக்கு சித்தமானால் தமிழகத்தில் கிருஷ்ணகிரி மாவட்டத்திலும் ஒரு சபை கட்டுவதற்கு ஜெபித்து வருகிறோம். இப்பணிகளுக்காக ஜெபித்துக் கொள்ளும்படி அன்புடன் வேண்டுகிறோம்.

புது நம்பிக்கையுடன் கிறிஸ்துவின் பணியில்

**சகோதரர். ஆ. ரவி குமார்**

# நெருக்கத்தில் தஞ்சம்

“நெருக்கடி’’ இந்த வார்த்தையை கேட்பதற்கு பொதுவாக யாரும் விரும்புவது இல்லை. ஆயினும் ஒவ்வொரு மனிதனும் தனது வாழ்வின் பல நிலைகளில் நெருக்கடிகளை சந்திக்கிறான். நெருக்கடியை சந்திக்காத ஒரு மனிதனும் உலகில் இருக்க வாய்ப்பில்லை. ஆண், பெண், சிறுவர், பெரியவர், ஏழை, பணக்காரர் என அனைத்து தரப்பினரும் நெருக்கடிகளையும், இடற்பாடான தருணங்களையும் சந்திக்கின்றனர். ஆட்சியாளர்களும், மன்னர்களும் கூட நெருக்கடிகளையும், நெருக்கமான தருணங்களையும் சந்திக்கின்றனர்.

நமது வேதாகமத்தில் கூட மூன்று ராஜாக்கள் சந்தித்த நெருக்கங்கள் மிகத்தெளிவாக பதிவு செய்யப்பட்டுள்ளன. எதனால் நெருக்கங்களுக்குள் சென்றார்கள், எப்படி அந்த நெருக்கமான காலங்களை எதிர்கொண்டார்கள், அந்த நெருக்கங்களின் முடிவு அவர்கள் வாழ்வை மாற்றிய விதம் முதலியவை நம் ஒவ்வொருவருக்கும் பயனுள்ள பாடங்களை தருகின்றன.

மனிதன் நெருக்கமும், இக்கட்டும் நிறைந்த சூழலுக்கு தள்ளப்பட மனிதர்கள் செய்யும் தவறுகளே காரணமாக அமைகின்றன. நாம் தியானிக்க போகும் மூன்று ராஜாக்கள் எவ்விதமான தவறுகளை செய்தனர், அதனால் எவ்வாறு நெருக்கடியில் சென்றனர், தேவன் அவர்களை எவ்வாறு விடுவித்தார் என தொடர்ந்து சிந்திப்போம்.

**அ) தாவீது:** தாவீது இஸ்ரேல் நாட்டின் இரண்டாவது ராஜா. இவர் ராஜாவாக அபிஷேகம் (பட்டாபிஷேகம்) செய்யப்படும் முன்பு சவுல் ராஜா இவரை வெறுத்தார். கொலை செய்வதற்கும் முயன்றார். ஆகவே தாவீது பட்டணத்தை விட்டு ஓடி, கிராமங்களிலும், காடுகளிலும் சுற்றித்திரிந்தார். சவுல் ராஜாவும் தாவீதை தொடர்ந்து துரத்தினார். இவ்வாறு சவுலுக்கு பயந்து தாவீது ஓடி ஒளிந்த காலங்களில் சவுலால் வெறுக்கப்பட்ட பலர் தாவீதுடன் வந்து சேர்ந்து கொண்டனர். இவர்களில் சிலர் முறுமுறுக்கிறவர்களும், துன்மார்க்கரும் ஆவர். (1சாமு. 22:1,2) இப்படிப்பட்டவர்களின் ஒரு கூட்டத்திற்கு தாவீது தலைவனாக இருந்தான். துன்மார்க்கரின் சகவாசம் நல்லதா ? கெட்டதா ? என்று அவன் உணரும் சூழல் ஏற்பட்டது.

ஒருமுறை தாவீது பெலிஸ்தரின் பட்டணத்துக்கு சென்றிருந்தான். அங்கிருந்து அவன் திரும்பி வருவதற்கு முன் தாவீதின் மனைவி பிள்ளைகளையும், அவனுடன் இருந்த அறுநூறு பேரின் பிள்ளைகளையும் அமலேக்கியர் சிறைப்பிடித்து சென்றிருந்தனர். (1சாமு.30:1–6) தாவீது மிகவும் அழுதான். (வ.4) தாவீது மிகவும் நெருக்கப்பட்டான் (வ.6). அது மட்டுமல்ல, அவனுடன் தோழர்களாக இருந்த அறுநூறு பேர்களும் தாவீதுக்கு

விரோதமாகத் திரும்பினர். தாவீதை கல்லெறிந்து கொல்ல முயன்றனர். தாவீதின் நிலையை சற்று யோசித்துப்பாருங்கள். அவனது நண்பர்களே அவனுக்கு எதிராக திரும்பினர். முறுமுறுக்கும் துன்மார்க்கர்களை நண்பர்களாக கொண்டிருந்ததால், நண்பர்களே அவனுக்கு வேதனை கொடுத்தனர். நண்பர்களை தெரிவு செய்வது எத்தனை முக்கியமானது ?

இக்கட்டான, நெருக்கடியான நேரங்களில் நல்ல நண்பர்கள் எவ்வளவு அவசியம். ஆனால் தாவீதின் நண்பர்கள் அவனை கல்லெறிய தீர்மானித்தனர். இதனால் தாவீது மிகவும் நெருக்கப்பட்டான். எல்லோரும் அவனை கல்லெறிய சூழ்ந்தபோது தாவீது கர்த்தருக்குள்ளே தன்னை திடப்படுத்தினான். (வ.6). நெருக்கப்படுகிற காலங்களில் அவரே தஞ்சமானவர். (சங்.9:9) தாவீது தேவனிடம் விசுவாசம் வைத்தபடியால் தேவன் தாவீதின் நண்பர்களின் மனதை மாற்றினார். நெருக்கத்திலிருந்து விடுவித்தார். அவன் இழந்த அனைத்தையும் தேவன் மீண்டும் அவனுக்குக் கொடுத்தார். (1சாமு. 30:19) ஒன்றும் குறைவு படவில்லை.

**ஆ) யோசபாத்:** யூதாவின் ராஜா யோசபாத். தாவீதைப் போலவே கர்த்தருடைய காரியங்களில் மிகவும் உற்சாகமுள்ளவன். (2நாளா.17:1–9) கர்த்தரின் வசனத்தை மக்களுக்கு போதிக்க செய்தான். (வ.9). அப்படி இருந்தும் ஐசுவரியம், கனம் வந்தபோது கர்த்தரை மதியாத இஸ்ரேலின் ஆகாப் ராஜாவோடு சம்பந்தம் கலந்தான். (2நாளா.18:1–34). ஆகாப் ராஜாவின் வாழ்வு தேவனுக்கு பிரியமானபடி இல்லை. அவன் துன்மார்க்கன். அப்படியிருந்தும் நல்ல ராஜாவான யோசபாத் அவனுடன் நட்புடன் செயல்பட்டான். தாவீது முறுமுறுக்கிறவர்களை நண்பர்களாக தெரிந்து கொண்டது போல் யோசபாத் ராஜாவும் துன்மார்க்கன் ஆகாப் ராஜாவை நண்பனாக தெரிந்து கொண்டான். ஆகாப் ராஜா பிற்காலத்தில் யோசபாத் ராஜாவுக்கு கண்ணியாக மாறினான்.

ஆகாப் கள்ளத்தீர்க்கதரிசிகளின் சொற்படி நடப்பவன். அவர்களின் போலி உத்திரவாதத்தை நம்பியவன். ஆகவே அவர்கள் கூறியபடி ராமோத் என்னும் இடத்திற்கு யுத்தத்திற்கு சென்றான். கர்த்தரின் மெய் தீர்க்கதரிசியான மிகாயா கூறியதை புறக்கணித்தான். கூடா நட்புக்கு ஒரு இலக்கணம் ஆகாப் ராஜா. ஆனாலும் யோசபாத் ராஜா துன்மார்க்கன் ஆகாப் ராஜாவுடன் இணைந்து யுத்த களத்துக்கு சென்றான் (வ.28). ஆகாப் வஞ்சகன், சூழ்ச்சி காரன். நயவஞ்சகமாக பேசி யோசபாத் ராஜ வஸ்திரத்துடன் யுத்த களத்துக்கு செல்லக் கூறினான். ஆகாப் ராஜாவின் வஞ்சகத்தை அறியாத யோசபாத் தன் ராஜ வஸ்திரத்துடன் யுத்தத்திற்கு சென்றான். யுத்தம் தீவிரமானது. சீரியர்கள் யுத்தத்தில் வெற்றி முகம் காட்டினர். அவர்கள் ராஜ வஸ்திரம் தரித்திருந்த யோசபாத்தை இஸ்ரேலின் ராஜா என கருதி அவனை கொல்ல நெருங்கினர். இப்போதுதான் யோசபாத்

தனது இக்கட்டான நிலையை உணர்ந்தான். கூடா நட்பு கொண்டுவந்த கேட்டை உணர்ந்தான். தேவனை நோக்கி கூக்குரல் இட்டான். **(வ.31).** தேவன் அவனுக்கு இரங்கி சீரிய ராணுவம் அவனை விட்டு விலகும்படி செய்தார். வஞ்சகன் ஆகாப் இறந்தான். ஆனால் யோசபாத் தன் வீட்டிற்கு சமாதானத்தோடே திரும்பி வந்தான். **(2நாளா. 19:1)** நெருக்கப்பட்டபோது, மரண தருவாயில், யுத்தக்களத்தில் தேவனை நோக்கி கூக்குரலிட்ட யோசபாத் ராஜாவுக்கு தேவன் உதவினார், விடுவித்தார். நெருக்கப்படுகிற காலங்களில் அவரே தஞ்சமானவர் **(சங்.9:9)**

**இ) மனாசே:** யூதாவின் ராஜாவாக தனது பன்னிரண்டாம் வயதில் மனாசே அபிஷேகம் செய்யப்பட்டான். சிறுவயதிலிருந்தே கர்த்தருக்கு பிரியமில்லாத செயல்களை செய்து வந்தான். **(2நாளா.33:1–19)** அஞ்சனம் பார்க்கிறவர்களையும் குறி சொல்லுகிறவர்களையும் தனது ஆலோசகர்களாகவும், நண்பர்களாகவும் வைத்துக் கொண்டான். அவனது ஐக்கியமும், சகவாசமும் தேவனற்றவர்களுடன் இருந்தது. எருசலேம் ஆலயத்தில் கூட விக்கிரக சிலையை வைக்க துணிந்தான். கர்த்தரின் எச்சரிக்கைக்கு அவன் செவி சாய்க்கவில்லை **(வ.10).**

கர்த்தரின் எச்சரிக்கையை அசட்டை செய்த மனாசே ராஜா மீது அசீரியா ராஜா படையெடுக்க தேவன் அனுமதித்தார். கர்த்தரின் எச்சரிப்பை மீறும்போது, கர்த்தரின் சிட்சை தொடரும். அசீரிய படைகளுக்கும், மனாசேயின் படைகளுக்கும் யுத்தம் உண்டானது. மனாசே யுத்தத்தில் பயந்து ஓடினான். முட்செடிகளில் சென்று ஒளிந்து கொண்டான். அசீரிய படை அவனைப் பிடித்து சங்கிலியால் கட்டினர். தங்களின் நாட்டின் ஒரு பகுதிக்கு கொண்டு சென்றனர். இப்போது மனாசே தனக்கு உண்டான நெருக்கத்தை உணர்ந்தான். மரண பயம் அவனை வாட்டியது. இப்படி அவன் நெருக்கப்படுகையில் தன் தேவனாகிய கர்த்தரை நோக்கி கெஞ்சினான். தன்னை தேவனுக்கு முன் தாழ்த்தினான்.

அவன் விண்ணப்பத்துக்கு கர்த்தர் இரங்கி, அவனை அசீரியரிடமிருந்து விடுவித்தார். மனாசே ராஜா விடுதலை பெற்று எருசலேம் திரும்பினான். கர்த்தரை தேவன் என்று அறிந்தான். நெருக்கத்திலே விடுவிக்க தேவன் வல்லவர் என்பதை உணர்ந்தான். விக்கிரகங்களை எருசலேமை விட்டு அகற்றினான். கர்த்தருக்கு பலி செலுத்தி ஆராதித்தான்.

தாவீது, யோசபாத், மனாசே ராஜாக்களின் வாழ்வில் தவறான நண்பர்களால் நெருக்கங்களை சந்திக்க நேர்ந்தது. நெருக்கப்பட்டபோது தேவனை நோக்கி கூப்பிட்டார்கள், கெஞ்சினார்கள், தேவன் அவர்களை நெருக்கங்களிலிருந்து விடுவித்தார். நெருக்கப்படுகிற காலங்களில் அவரே தஞ்சமானவர் என உணர்ந்து கொண்டனர். இந்த தேவன் சதா காலமும் நமது தேவன். நமது நெருக்கங்களிலிருந்து நம்மை விடுவிக்க போதுமானவர்.

**(ஆ. ரவி குமார், இயக்குநர், புது நம்பிக்கை)**

# மிஷனரி அறிமுகம்



| | | |
|---|---|---|
| **பணிக்களம்** | **:** | **கிருஷ்ணகிரி மாவட்டம்** |
| **மாநிலம்** | **:** | **தமிழ்நாடு** |
| **மிஷனரி** | **:** | **மீகா** |

மிஷனரி மீகா அவர்கள் கிருஷ்ணகிரி மாவட்டத்திலுள்ள பணிக்களத்தில் பல ஆண்டுகளாக பணியாற்றி வருகிறார்கள். இப்பணிக்களத்திலுள்ள விசுவாசிகள் அனைவரும் ஆடு, மாடு மேய்ப்பதை முக்கிய தொழிலாக கொண்டுள்ளனர். சிலர் விவசாய கூலி தொழிலாளிகளாக பணியாற்றுகிறார்கள். இவர்கள் மிகவும் ஏழைகள். இப்பணிக்களத்தில் சபை கட்டுவதற்கு போதிய நிதி வசதி இல்லாதபடியால் சபை கட்டுமான பணிகள் தடைபட்டுள்ளது.

தற்போது இப்பணிக்களத்தில் 70 பேர் கர்த்தரை ஆராதித்து வருகின்றனர். சொந்தமாக சபை கட்டப்படுமாயின் இன்னும் அநேகர் கர்த்தரை ஆராதிக்க ஆர்வத்துடன் வர முடியும்.

இப்பணிக்களத்தில் சபை கட்டுவதற்காக ஜெபத்துடன் முயற்சித்து வருகிறோம். கர்த்தருக்கு சித்தமானால் இவ்வாண்டில் இச்சபை கட்டி முடிக்கப்பட ஜெபிக்கும்படி அன்புடன் வேண்டுகிறோம்.

சபை கட்ட மதிப்பீடு ரூ. 6.00 லட்சம்

# இயேசு கிறிஸ்துவின் இரத்தம்

இயேசு கிறிஸ்துவின் இரத்தம் என்கிற வாசகம் புதிய ஏற்பாட்டில் பல முறை உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது. இவ்வாசகத்தை நாம் நம்முடைய பாடல்களிலும் நம்முடைய ஜெபங்களிலும் பயன்படுத்தி வருகிறோம். ஆனால் ‘‘இயேசு கிறிஸ்துவின் இரத்தம்’’ என்கிற பதம் பைபிளில் பயன்படுத்தப்பட்ட நோக்கத்தையும் அதில் காணப்பட்டுள்ள இறையியல் உண்மைகளையும் நாம் புரிந்து கொண்டால் நாம் கர்த்தருடைய இரட்சிப்பின் கிரியையை தெளிவாய் அறிந்து கொள்ள முடியும்.

**பைபிளில் இரத்தம் / இரத்தம் சிந்துதல் என்கிற பதங்கள் பயன்படுத்தப்பட்டுள்ள விதம்:–**

ஹைமா (haima) என்கிற கிரேக்க பதம் 95 தடவை புதிய ஏற்பாட்டில் பயன்படுத்தப்பட்டுள்ளது. அதில் 35 தடவை இயேசு கிறிஸ்துவின் இரத்தத்தையும் அதின் முக்கியத்துவத்தையும் குறிப்பதாய் காணப்படுகிறது. பைபிளில் பலிகளுக்காய் இரத்தஞ்சிந்துதலை குறிக்கிற இடத்தில், அது அந்த பலி மிருகத்தினுடைய மரணத்தை குறிக்கிறது.

**பழைய எற்பாட்டில் பாவ நிவிர்த்திக்கு இரத்தஞ் சிந்துதல் தேவை ஏன் ?**

பழைய ஏற்பாட்டில் ஒவ்வொரு பலி முறையும் பூரண பலியாகிய இயேசு கிறிஸ்துவின் பலிக்கு முன்னடையாளமாய் காணப்படுகிறது. பழைய ஏற்பாட்டில் பாவ நிவிர்த்திக்கு இரத்தஞ்சிந்துதலின் முக்கியத்துவத்தை லேவி. 17:11 குறிப்பிடுகிறது.

பலி என்றால் விலையேறப்பெற்ற ஒன்றை ஒரு முக்கிமான காரணத்திற்காய் அர்பணிப்பது ஆகும். பாவநிவிர்த்தி என்பது ஒருவருக்கு விரோதமாய் செய்யப்பட்ட குற்றத்திற்கு பதிலாக செய்யப்படுகிற உபகாரம் ஆகும். இதையே லேவி. 17:11 வலியுறுத்துகிறது. அநேக இரத்தஞ்சிந்துதலின் பலிகள் செலுத்தப்பட்டபடியால் வரப்போகிற இரட்சகர் தன்னுடைய பூரண பலியை இரத்தஞ்சிந்துதலின் மூலமாய் மட்டுமே நிறைவேற்ற முடியும் என்பதை முன்னடையாளமாய் அறிவித்திருக்கிறது. மட்டுமல்ல பழைய ஏற்பாட்டில் இரத்தஞ் சிந்துகிற பலி, தன் முழு இரத்தத்தையும் சிந்தி கட்டாயமாய் மரிக்க வேண்டும். அப்போதுதான் அந்த பலி ஏற்புடையதாகும். அதைப்போலவே வரப்போகிற இரட்சகர் தன் மரணத்தின் மூலமாய்தான் இரட்சிப்பை நிறைவேற்ற முடியும் என காண்பிக்கிறது.

எபிரெயர் 9:11–18 வாக்கியங்களில் லேவி. 17:11 முன்வைத்து எப்படி இயேசு கிறிஸ்து பழைய ஏற்பாட்டு பலிமுறைகளை ஒழித்து தன்னையே நிரந்தரமான பலியாக ஒப்புக்கொடுத்து இரத்தஞ்சிந்தும் பலி முறைகளை ஒழித்தார் என காண்பிக்கிறது.

**இயேசு கிறிஸ்துவின் இரத்தம் என்றால் என்ன ? ஏன் ?**

இயேசு கிறிஸ்துவின் இரத்தம் என்றால் இயேசு கிறிஸ்து சிலுவையில் தன்னுடைய இரத்தத்தை சிந்தி நம் பாவங்களுக்காய் மரித்தார் என்பதே அர்த்தமாகும். இதையே அப்போஸ்தலனாகிய பேதுரு 1–பேதுரு 1:18–19 மற்றும் 1–பேதுரு 2:24ல் குறிப்பிடுகிறார்.

மனிதர்கள் அனைவரும் பாவிகள் (ரோ. 3:23, 1–யோவான் 1:8) பாவத்தின் சம்பளம் மரணம் (ரோ. 6:23) மனிதன் தன் சுய கிரியைகளால் மீட்படைய முடியாது. ஆனால் நம்மை மீட்க திட்டம் கொண்ட திரியேக தேவன், தேவத்துவத்தின் இரண்டாம் நபராயிருக்கிற குமாரனை, இயேசு என்கிற பெயரிலே இந்த பூமிக்கு காலம் நிறைவேறினபோது அனுப்பினார். அதற்கு முன்னடையாளமாய் பழைய ஏற்பாட்டிலே பாவம் மற்றும் அதின் பரிகாரத்தை பலிமுறைகள் மூலமாய் வெளிப்படுத்தியிருந்தார். ஆனால் அந்த பலி முறைகளால் முழுமையாய் பாவத்தை மாற்ற இயலவில்லை. மற்றும் மீண்டும் மீண்டும் செலுத்தப்பட வேண்டியதாயிருந்தது.

இயேசு கிறிஸ்து பூமிக்கு வந்த போது "உலகத்தின் பாவங்களை ஒரே தரமாய் சுமந்து தீர்க்கிற தேவ ஆட்டுக்குட்டியாக வந்தார் (யோவான் 1:29) லேவியராகமம் 16–ம் அதிகாரத்தில் இயேசுகிறிஸ்துவின் பாவ நிவிர்த்திக்கு முன்னடையாளமான பாவ நிவிர்த்தி நாளின் பலிமுறைகளின் படி (எபி. 7:27) சர்வ லோகத்தின் பாவமும் சிலுவையிலே இயேசுவின் மேல் சுமத்தப்பட்டது. (2–கொரி. 5:21, 1–பேதுரு 2:24, ஏசா. 53:6). இந்த உலகத்தில் பிறந்த முதல் மனிதன் முதற்கொண்டு இனி இந்த உலகத்தில் பிறக்கப்போகிற கடைசி மனிதன் வரைக்கும் செய்த மற்றும் செய்யப்போகிற அனைத்து பாவங்களுக்கான தண்டனையும் இயேசு கிறிஸ்து சுமந்து தீர்த்துவிட்டார். ஆனால் ஒருவன் தேவனுடைய கோபாக்கினையிலிருந்து இரட்சிக்கப்பட "இயேசு கிறிஸ்து என் பாவங்களுக்காக இரத்தஞ் சிந்தி மரித்து அடக்கம்

---

# முன்னேற்ற பணியாளர்கள் தேவை

மிஷன் பணிக்களங்களில் பணியாற்றும் மிஷனரிகளுக்கு **புதுநம்பிக்கை** மிஷன் பல்வேறு வகைகளில் உதவி செய்து வருகிறது. மிஷனரிகளுக்கு உதவி செய்யும் மிஷனரி பணியில் ஆர்வமுள்ள தன்னார்வ முன்னேற்ற பணியாளர்கள் தேவை. தாங்கள் வாழ்ந்து வரும் பகுதியிலேயே இப்பணிகளை செய்யலாம். மிஷனரி பணியில் ஆர்வமுள்ள கிறிஸ்தவ சகோதரர் / சகோதரிகள் இப்பணிகளை ஜெபத்துடன் செய்யலாம். (நேரில் வர விரும்புவோர் முன் நேரம் குறித்து வரவும்)

எமது அலுவலக முகவரி:
**புது நம்பிக்கை மிஷன்**
75/33, ஐசக் தெரு, நாகர்கோவில் - 629 001.
தொடர்பு எண் : 9442935233

பண்ணப்பட்டு மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்தார் என விசுவாசிக்க வேண்டும். 1கொரி. 15:1–4; ரோ. 10:9,10; 1 யோ. 1:7,9. பாவ மன்னிப்பை பெற்றுக்கொள்ள வேறு வழியே இல்லை. (அப். 4:32; யோ. 14:6)

**இயேசு கிறிஸ்துவின் இரத்தத்தினால் (மரணத்தினால்) நமக்கு கிடைக்கும் நன்மைகள்:–**

i) மீட்பு – அப். 20:28; எபே. 1:7; 1 பே. 1:9; வெளி 5:9

ii) சுத்திகரிப்பு – எபி. 9:14; 1யோ. 1:7; வெளி 7:14

iii) கிருபாதார பலி – ரோ. 3:26

iv) பாவ மன்னிப்பு – எபே. 1:7; எபி. 9:26; வெளி 1:5

v) தேவனோடு ஐக்கியம் – எபே. 2:13; எபி. 10:19

vi) ஒப்புரவாகுதல் – ரோ. 5:9

vii) பரிசுத்தமாகுதல் – எபி. 13:12

viii) தீமையின் மீது வெற்றி– வெளி 12:11

ix) புது உடன்படிக்கையின் மையம் – எபி. 13:20

x) கர்த்தருடைய பந்தி – மத். 26:28; 1கொரி. 10:16

மேற்கூறிய வேறு யாராலும் செய்ய முடியாத நன்மைகளை இயேசு கிறிஸ்து தனது மரணம் மற்றும் உயிர்த்தெழுதலின் மூலமாய் நமக்கு செய்திருக்கிறார். தேவனுடைய அளப்பெரிய தியாகமான அன்பை மறவாதிருப்போம் *(S. மோசஸ் ராஜ்)*

---

## மிஷனரி / போதகர் உதவி திட்டம்

நமது புதுநம்பிக்கை மிஷன் மூலம் இந்திய மிஷன் பணிக்களங்களில் பணியாற்றும் பணியாளர்களுக்கு பல்வேறு வகைகளில் உதவி செய்து வருகிறோம்.

மிஷனரிகளுக்கு மாத உதவி தொகை, மருத்துவ உதவி, சபை கட்ட உதவி செய்தல், போதகர் இல்லம் கட்ட உதவி செய்தல், மிஷனரி பணிக்களங்களுக்கு இரு சக்கர வாகனம் வழங்குதல், ஏழை மிஷனரி பிள்ளைகளுக்கு கல்வி உதவி தொகை வழங்குதல் என பல உதவி திட்டங்களை புது நம்பிக்கை மிஷன் செயல்படுத்தி வருகிறது. இப்பணிகள் மூலம் பல மிஷனரிகளும் அவர்களது குடும்பங்களும் பயனடைந்து வருகின்றனர்.

புதுநம்பிக்கை மிஷன் பணிகளுக்காக ஜெபித்து கொள்ள அன்புடன் வேண்டுகிறோம்.

மேலும் தகவல்களுக்கு : 9442935233

# தம்பி தலைவனாகு . . .!

தமிழகம் எங்கும் மாணவர்கள் திரண்டு ஒரு பெரும் உரிமைப் போராட்டத்தை 2017 ஜனவரி மாதம் நடத்தினர். ஜல்லிக்கட்டுக்கு ஆதரவாக மெரினாவில் சிறியதாக ஆரம்பித்த இந்த மாணவர் எழுச்சி தமிழகமெங்கும் பரவியது. இந்த போராட்ட குழுவினருடன் பேச்சு வார்த்தை நடத்த அதிகாரிகள் முயன்றனர். ஆனால் அதிகாரிகள் தரப்பில் யாருடன் பேச்சு நடத்துவது என்று குழப்பம் ஏற்பட்டது. குழப்பத்தின் காரணம் என்ன ? போராட்ட குழுவின் 'தலைவர் யார்' என ஒருவருக்கும் தெரியாமல் போனதே. போராட்டக்காரர்களும் தங்களில் யாரையும் தலைவராக தெரிந்தெடுக்கவில்லை. தலைவரற்ற போராட்டம் வெற்றி பெற்றது. ஆனால் தலைவர் இல்லாமல் போனதால் பேச்சுவார்த்தை நடத்த முடியவில்லை. ஒருகட்டத்தில் தடம் மாறி போய்விட்டதோ என கருத வேண்டிய சூழல் ஏற்பட்டது. இதன் காரணம் என்ன ? தலைவன் இல்லை.

இதுவே உலகம் எங்கும் இன்று காணப்படும் ஒரே பெரும் குறைபாடு. ''தலைவன் இல்லை''. தலைவர்கள் இருப்பினும் நல்ல தலைவர்கள் இல்லை என்னும் குறை உலகமெங்கும் உள்ளது. நல்ல தலைவர்களுக்கு தட்டுப்பாடு ஏற்பட்டுள்ளது. நமது முன்னாள் பிரதமர் இந்திராகாந்தி ஒருமுறை இவ்வாறு கூறினார், ''இன்றைய இளைஞர்கள் இந்தியாவின் எதிர்காலத் தலைவர்கள்''. அவரின் கூற்று முற்றிலும் உண்மை. வீட்டை நடத்த தலைவர்கள் வேண்டும். நாட்டை நடத்த தலைவர்கள் வேண்டும். சபையை வழிநடத்த தலைவர்கள் வேண்டும். ஆம்! நல்ல தலைவர்கள் வேண்டும். நாட்டிற்கு நல்ல தலைவர்களே தேவை. ஆனால் நல்ல தலைவர்களுக்கு பஞ்சம்.

நல்ல தலைவர்களை உருவாக்குவது எப்படி ? நல்ல தலைவர் உருவாகும் அனைத்து வழிமுறைகளையும் வேதாகமம் மிகத் தெளிவாக கூறுகிறது. பைபிள் அனேக தலைவர்களின் சரித்திரத்தை பதிவு செய்துள்ளது. ஆபிரகாம், யோசேப்பு, மோசே, சாலொமோன், தானியேல், பவுல் போன்ற பல தலைவர்களின் சரித்திரத்தை பைபிள் மிக சரியாக பதிவு செய்துள்ளது. இவர்கள் தாங்கள் வாழ்ந்த காலங்களில் தாங்கள் வாழ்ந்த சமூக மக்களை மிகமிகக் கரிசனையுடன் வழிநடத்தினார்கள். தேவ பக்தியும், தேச பக்தியும் நிறைந்த நல்ல தலைவர்களாக விளங்கினர்.

இப்படிப்பட்ட நல்ல தலைவர்கள் நமது நாட்டிற்கு கிடைப்பார்களா ? நிச்சயம் கிடைப்பார்கள். எங்கே கிடைப்பார்கள் ? வேறு எங்குமில்லை.

உன்னில்தான்! உனக்குள் ஒரு நல்ல, சிறந்த தலைவன் இருக்கிறான். அவனை மாபெரும் தலைவனாக உருவாக்கு!

நல்ல தலைவனாக உருவாக 'புது நம்பிக்கை' தேவை. அந்த புது நம்பிக்கை இறைவன் மீதுள்ள விசுவாசம் மட்டுமே.! விசுவாசம் கொண்ட தானியேல் பெருந்தலைவனாக மாறினான். விசுவாசமே உலகத்தை ஜெயிக்கின்ற ஜெயம். தம்பி உன்னிலுள்ள விசுவாசம் உலகத்தை ஜெயிக்கும். இயேசுவை விசுவாசி. அவர் உன்னை தலைவனாக்குவார். தம்பி தலைவனாகு.

- எச்.ஆர்.கே.

---

# அஞ்சல் வழி வேதாகம பயிற்சி

**வேதாகம கல்லூரி படிப்பு மையங்கள் :**

நாகர்கோவில், மார்த்தாண்டம், இரணியல், திருநெல்வேலி, கருங்கல், ஈரோடு, திருப்பூர், திருவண்ணாமலை, பஞ்சாப்.

இறையியல் மற்றும் வேதாகமத்தை முறைப்படி படிக்க ஓர் அரிய வாய்ப்பு. தேவனுடைய வார்த்தை தெளிவாக கற்று தேற உதவும் வகையில் கீழ்கண்ட பயிற்சிகள் நேரடி வகுப்பு மற்றும் அஞ்சல் வழியாக வழங்கப்பட்டு வருகிறது. ஆர்வமுள்ள அனைவரும் படிக்கலாம்.

| படிப்பு | காலம் | தகுதி |
|---|---|---|
| Bachelor of Theology | 3 ஆண்டுகள் | +2 தேர்ச்சி |
| Bachelor of Bible Studies | 2 ஆண்டுகள் | தமிழ் படிக்க தெரிந்தவர்கள் |
| Master of Divinity | 2 ஆண்டுகள் | B.Th |
| Master of Ministry | 2 ஆண்டுகள் | B.B.S |
| Master of Theology | 2 ஆண்டுகள் | M.Div. |
| Diploma in Biblical Hebrew | 2 ஆண்டுகள் | தமிழ் தெரிந்தவர்கள் |

ஆர்வமுள்ள கிறிஸ்தவ ஆண் / பெண் இருபாலரும் படிக்கலாம். தமிழ் மற்றும் ஆங்கில வழியில் படிக்க வசதியுண்டு. குறைந்த கட்டணம் தரமான பயிற்சி.

மேலும் விபரங்களுக்கு:–

**Director**
**CALS - Bible Course**
Harris House,
8/69-c, Manvilagam,
Reethapuram P.O.
K.K.Dist - 629 159
Cell : 9442935233



# சபை அர்பணம்



புதுநம்பிக்கை மிஷன் மூலம் ஆந்திர மாநிலம், கிழக்கு கோதாவரி மாவட்டத்தில் பெத்தாவரம் பகுதிக்குட்பட்ட ஏரம்பாளையம் கிராமத்தில் புதிதாக சபை கட்டப்பட்டது. இச்சபையின் கட்டுமான பணி செவ்வனே முடிக்கப்பட்டு ஜனவரி–28, 2017 அன்று காலையில் தேவ நாம ம கி மை க் கெ ன் று அர்பணிக்கப்பட்டது.

திரளான ஜனங்கள் அந்த ஆராதனையில் கலந்து கெண்டு கர்த்தருக்க மகிமை செலுத்தினர். புதுநம்பிக்கை மிஷன் நிர்வாகிகள், மற்றும் அண்டைய பணிக்கள மிஷனரிகள் இவ்வாராதனையில் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.





இந்த ஆலயத்தை கட்ட உதவி செய்த அன்புக்குரிய திரு. சத்தியதாஸ் அவர்கள் குடும்பத்தை தேவன் தாமே ஆசீர்வதித்து காக்கக்கடவர். ஜெபித்த உங்கள் யாவருக்கும் அந்த சபை மக்கள் சார்பாகவும், பைபிள் ஒப்பன் ஏர் மிஷன் சார்பாகவும் இதயம் நிறைந்த நன்றியை செலுத்துகிறோம். தேவ நாமம் மகிமைப்படுவதாக!

நமது மிஷன் பணிக்களங்களை நேரில் பார்வையிட்டு ஜெபிக்க உங்களை அன்புடன் அழைக்கிறோம்.
தொடர்பு எண் : **9443155120 & 9442935233**

# சுகமளித்த தேவாதி தேவனுக்கு நன்றி

நமது அன்புக்குரிய தென்னிந்திய திருச்சபை போதகர் Rev.C.சுந்தரராஜ் அவர்கள் இருதய அறுவை செய்து சிகிட்சை பெற்றார். கர்த்தர் அவருக்கு பரிபூரண சுகத்தை கொடுத்தார். அவரது சுகத்துக்காக ஜெபித்த நல்லுள்ளங்கள் அனைவருக்கும் நன்றி கூறுகிறோம். கர்த்தர்தாமே அவரையும் அவரது குடும்பத்தையும் ஆசீர்வதிப்பாராக !.

– புதுநம்பிக்கை மிஷன்

---

# போதகர் & ஊழியர் கருத்தரங்கு – 2017



BOAM-India மற்றும் புது நம்பிக்கை மிஷன் இணைந்து நடத்திய போதகர்களுக்கான கருத்தரங்கு 21–02–2017 அன்று நாகர்கோவிலில் நடைபெற்றது. Rev.A.L.சுப்பிரமணியன் மற்றும் குழுவினர் கலந்து கொண்டு தேவ செய்தி கொடுத்தார். நிகழ்ச்சி நடைபெற்ற சபை வளாகத்தை தந்து உதவிய சபை போதகர் மதிப்புக்குரிய போதகர் வி.எஸ். ராஜா அவர்களுக்கும், கலந்து கொண்டு சிறப்பித்த போதகர் பெருமக்களுக்கும் கிறிஸ்தவ நண்பர்களுக்கும் எமது நன்றிகள் உரித்தாகுக.

---

# மிஷனரி பயிற்சி – பஞ்சாப்



பஞ்சாப் மாநிலத்தில் பெப்ரவரி 28– முதல் மார்ச் 3 வரை நடைபெற்ற மிஷனரி பயிற்சியில் சகோ.சி.பால் பென்னட் சிங் அவர்கள் கலந்து கொண்டு மிஷனரிகளுக்கு பயிற்சி கொடுத்தார். இந்தியாவின் பல மாநிலங்களிலிருந்து வந்த அநேக இளம் போதகர்களும் இப்பயிற்சியில் பங்கெடுத்து பயன்பெற்றனர். இப்பயிற்சியினை BOAM- India ஒருங்கிணைத்து நடத்தியது. இந்நிகழ்ச்சியினை ஆசீர்வாதமாக நடத்த கர்த்தர் உதவி செய்தார்.

---

**குறிப்பு:** *ஆயுள்சந்தா ரூ.2000/– செலுத்துபவர்களுக்கு புது நம்பிக்கை வெளியீடுகள் அனைத்தும் இலவசமாக அனுப்பித் தரப்படும்.*



# மருத்துவ குறிப்பு– அத்திப்பழம்

அத்திப்பழம் மத்திய கிழக்கு மற்றும் மேற்காசிய பகுதியை தாயகமாகக் கொண்டது. அத்திப்பழம் மிகச்சிறந்த மருத்துவ குணங்களை கொண்டது. அத்திப்பழத்தில் சுண்ணாம்பு சத்து, இரும்பு சத்து, புரதம் மற்றும் சில விட்டமின்கள் நிறைந்துள்ளன. அத்திப்பழம் இதய தசைகள் வலுப்பட உதவும். உடலிலுள்ள அதிகப்படியான பித்தத்தை வியர்வை மூலம் வெளியேற்றி நுரையீரலை பாதுகாக்கிறது. இப்பழத்தில் நார்சத்தும் உள்ளது. இதனை தொடர்ந்து சாப்பிட்டு வந்தால் குடல்புண், வாய் துர்நாற்றம் முதலியவை கட்டுப்படும். இரத்த உற்பத்தி அதிகரிக்க அத்திப்பழம் உதவும்.

---

# பொதுஅறிவு – உலக செய்திகள்

1. தீபாவளியை சிறப்பிக்கும் விதமாக புதிய தபால் தலையை அமெரிக்கா வெளியிட்டுள்ளது.
2. பணமில்லா சமூகம் மற்றும் டிஜிட்டல் பொருளாதாரத்தை ஊக்குவிக்க நிதி ஆயோக்கினால் அமைக்கப்பட்ட குழு தலைவராக சந்திரபாபு நாயுடு பொறுப்பெடுத்துள்ளார்.
3. 2016–ம் ஆண்டிற்கான சர்வதேச குழந்தைகளுக்கான அமைதி பரிசை கேஹ்காஷான் பாசு பெற்றார்.
4. ஏழாவது உலக ஆயுர்வேத காங்கிரஸ் மாநாடு கொல்கத்தாவில் நடைபெற்றது.
5. இந்தியாவின் உச்சநீதிமன்ற 44–வது தலைமை நீதிபதியாக ஜே.எஸ்.கோஹர் பொறுப்பேற்றுள்ளார்.
6. அம்பேத்காரின் பிறந்தநாள் 2017 முதல் ‘‘நீர் தினம்’’ என அனுசரிக்கப்படும்.
7. ஐந்தாண்டு சட்டப்படிப்புக்கான அதிக பட்ச வயது வரம்பு 20–லிருந்து 22 ஆகவும், மூன்றாண்டு பட்ட படிப்புகளுக்கான அதிகபட்ச வயது வரம்பு 30–லிருந்து 45–ஆக உயர்த்தி பார் கவுன்சில் அறிவித்துள்ளது.
8. பிப்ரவரி–28–ம் நாள் தேசிய அறிவியல் தினமாக அனுசரிக்கப்படுகிறது.
9. தமிழகத்தில் ஜல்லிக்கட்டுக்கு ஆதரவாக ஜனவரி 2017 நடைபெற்ற மாணவர் போராட்டத்தை ‘‘தை புரட்சி’’ என பெயரிட்டு அழைக்கின்றனர்.
10. அமெரிக்க அதிபராக டொனால்ட் டிரம்ப் 2017 ஜனவரியில் பதவி ஏற்றார்.

# ரூத் – நற்குண நங்கை

ரூத்தைப் பற்றி நாம் அநேக செய்திகள் கேட்டிருக்கலாம். ஆனாலும் மீண்டும் ரூத் குறித்து ஒரு சில காரியங்களை உங்களோடு பகிர்ந்து கொள்வது நம் அனைவருக்கும் நன்றாக இருக்கும் என நம்புகிறேன்.

ரூத் ஒரு செயல்படும் விசுவாசியாக காணப்பட்டாள். எல்லாம் இழந்த சூழ்நிலையிலும் தன் கடமைகளை நன்கு உணர்ந்தவளாக காணப்பட்டாள். **(சங். 38:11; யோபு. 19:14; ரூத். 2:11)** சாக்கு போக்க சொல்லாமல் கடினமாக உழைப்பவள். அதிகாலமே எழுந்து வேலை செய்தவள். அதே வேளையில் தானாக முன் வந்து தன் மாமியாருக்கு செய்ய வேண்டியவற்றை அன்போடு செய்து வந்தாள். மாய்மாலம் இல்லாத உண்மையான பாசத்தை வெளிப்படுத்தும் குணம் ரூத்திடம் காணப்பட்டது. பிறருக்கு குறிப்பாக தனக்கு நன்மை செய்தோருக்கு நன்றியுடையவளாகவும் இருந்தாள். பெரியவர்களை, முதியோர்களை, மாமியாரை மதிக்கின்ற உயரிய குணத்துடன் காணப்பட்டாள்.

ரூத்திடம் காணப்பட்ட வித்தியாசமான ஒரு குணம் உன்னதமான கீழ்படிதல். தன் மாமி சொன்ன செயல்கள் அத்தனையிலும் எதிர் சொல்லாது கீழ்படிந்தாள். நமக்கு இது ஆச்சரியமாக தோன்றலாம். கீழ்படிதலால் ஆசீர்வாதத்தைப் பெற்றுக் கெண்டாள். நீதிமொழிகள் **31**–ம் அதிகாரத்தில் கூறப்பட்டுள்ளபடி குணசாலியான பெண்ணாக காணப்பட்டாள். **(ரூத். 3:10,11)** ஊரார் எல்லோரும்போற்றும் வண்ணமாக காணப்பட்டாள்.

ரூத் வாழ்ந்த வாழ்வு ஒரு முன்மாதிரியான வாழ்வு ஆகும். பெண்களாகிய நாம் ரூத்தை போல தேவன் மேல் விசுவாசம் , அன்பு கடின உழைப்பு, கீழ்படிதல் போன்ற குணங்கள் நம்மில் வளர முயற்சிப்போம். ஜெபிப்போம். தேவன் உதவி செய்வார். *– வசந்த நேசம்.*

---

## நன்கொடை அனுப்புவோர் கவனத்திற்கு

நன்கொடை மற்றும் காணிக்கை அனுப்புவோரும், வங்கியில் காணிக்கை செலுத்துவோரும் தயவு செய்து தங்கள் பெயர் மற்றும் முழு முகவரியை எமக்கு தெரிவிக்கவும். உரிய ரசீது கொடுக்க அது உதவிகரமாக அமையும். நன்றி.

**எமது வங்கி கணக்கு எண் : 254901000557777**
**வங்கி : இந்தியன் ஓவர்சீஸ் வங்கி** (IOB)
**கிளை : மிடாலக்காடு** (Midalakkadu)
IFSC Code : IOBA 000 2549

# வேதாகம வினா – விடை போட்டி

வேதாகம பகுதி : – நீதிமொழிகள்

1. முற்கோபி எதை வெளிப்படுத்துகிறான் ?
2. திருப்தியாக புசிப்பவன் யார் ?
3. முள் வேலிக்கு சமமானது எது ?
4. துரவு என்ற வார்த்தை எந்த இடத்தில் உள்ளது ?
5. வாலிபரின் அலங்காரம் எது ?
6. ஆசீர்வதிக்கப்படுகிறவன் யார் ?
7. சிங்காசனம் எதனால் நிலைநிற்கும் ?
8 சண்டையை ஏற்படுத்துகிறவன் யார் ?
9. மிகவும் பாரமானது எது ?
10. கனமடைகிறவன் யார் ?

விடைகளை அனுப்ப வேண்டிய முகவரி
**S. Vasantha Nesam**
23- Eastaff Street, Nagercoil - 629 001
Cell : 9789183072

விடைகள் வந்துசேர வேண்டிய கடைசி நாள் : ஏப்ரல் **30, 2017**

---

## மிஷனரி பிள்ளைகளுக்கு கல்வி உதவி வழங்குதல்

இந்தியாவில் பல்வேறு மாநிலங்களில் மிஷனரிகளாக பணியாற்றும் மிஷனரியின் பிள்ளைகளுக்கு கல்வி உதவி தொகை வழங்க புதுநம்பிக்கை மிஷன் உதவி செய்கிறது.

**1** முதல் **8**ம் வகுப்பு வரை – மாதம் ரூபாய் **300/–**

**9** முதல் **12**ம் வகுப்பு வரை – மாதம் ரூபாய் **500/–**

மேலும் +**2** –ல் அதிக மதிப்பெண் எடுத்து மருத்துவம், பொறியியல், ஹோட்டல் மேனேஜ்மென்ட் முதலிய உயர்கல்வி படிக்கும் மிஷனரி பிள்ளைகளுக்கு சிறப்பு கல்வி உதவி (Special Scholarship) வழங்கி புதுநம்பிக்கை உதவுகிறது.

மிஷனரி பிள்ளைகளுக்காக ஜெபித்து உதவ முன்வருவோம்!

கூடுதல் விபரங்களுக்கு தொடர்பு எண்: **9442935233**

“இடைவிடாமல் ஜெபம் பண்ணுங்கள் ....” (1 தெச.5:17)

# ஜெப விண்ணப்ப குறிப்புகள்

- ☞ ஆந்திர மாநிலம் பெத்தாவரம் அருகில் அமைந்துள்ள தொழுநோயாளிகளின் குழந்தைகளுக்கு நல்ல கல்வி மற்றும் உணவு தேவைகள் சந்திக்கப்பட
- ☞ கிருஷ்ணகிரி மாவட்டதில் அந்தேவன பள்ளி கிராம சபை கட்டுவதற்கான தேவைகள் சந்திக்கப்பட்டு கர்த்தருக்கு சித்தமானால் 2017–ல் சபை கட்டி முடிக்கப்பட
- ☞ சந்தீஸ்கர் மாநிலம் சகோ.ஜெபஸ்டீன் அவர்கள் பணிக்களத்தில் கட்டப்பட்டு முடிக்கப்படாமல் இருக்கும் சபை கட்டிட பணிகளுக்கான தேவைகள் சந்திக்கப்பட
- ☞ பஞ்சாப், இமாசல பிரதேசம் முதலிய மாநிலங்களில் நமது பணிக்களங்கள் வளர்வதற்கான தேவ ஒத்தாசைகளுக்காக
- ☞ புதிதாக அமைக்கப்படவுள்ள கிராம நற்செய்தி குழுக்களுக்காக
- ☞ ஏற்கனவே நமது ஐக்கியத்துடன் இணைந்து கிராம பணி செய்துவரும் சுவிசேஷக வாகன குழுக்களின் பாதுகாப்பான சுவிசேஷ பயணம் மற்றும் நற்செய்தி பிரதிகளின் தேவைகள் சந்திக்கப்பட
- ☞ சுவிசேஷத்தின் பாலைவனம் என கருதப்படும் கர்நாடக மாநிலத்தில் கிராமங்களில் அதிக சிரமத்துடன் பணியாற்றிவரும் நமது மிஷனரிகளின் தேவைகள் சந்திக்கப்பட
- ☞ மக்களிடையே சாதி, இன மோதல்கள் இல்லாமல் இயேசுவில் ஒன்றிணைந்து இந்தியா முன்னேற்ற பாதையில் செல்ல
- ☞ வருகிற ஈஸ்டர் பண்டிகை காலங்களில் சுவிசேஷ பணிக்கு எதிரானவர்கள் மிஷனரி பணிக்களங்களில் உள்ள மிஷனரிகளையும், சபை மக்களையும் தாக்காமல் இருக்கவும் சுவிசேஷத்துக்கு எதிராக செயல்படும் நபர்கள் இயேசுவை அறிந்து மீட்கப்படவும் . . . நாம் தொடர்ந்து ஜெபிப்போம்.
- ☞ சகோ. ரமேஷ் – ஷர்மிளா குடும்பத்துக்கு ஆண் குழந்தை பாக்கியத்தை தேவன் அருளும்படியாக
- ☞ சகோதரி. டெய்சி அவர்களின் கேன்சர் வியாதி சுகமாகவும், சிகிட்சைக்கு தேவையான பண உதவிகள் கிடைக்கவும்

உங்கள் தனி ஜெபம், குடும்ப ஜெபம் மற்றும் ஜெபக்குழுக்களில் ஜெபிக்க அன்புடன் வேண்டுகிறோம்.

# பாடல் புத்தகம் – வெளியீடு

சபை ஆராதனை, வீட்டு ஜெபக்கூட்டம், தனி ஜெபத்தில் தேவனை பாடி துதிக்க பக்தி பரவசம், இனிமையான பாடல்களின் தொகுப்பு. 500–க்கும் மேற்பட்ட பழைய, புதிய பாடல்கள் மலையாள, ஆங்கில பாடல்களும் உண்டு. பாடல் புத்தகத்தின் விலை ரூ. 70/–



**எமது இதர வெளியீடுகள்**
**யூத பண்பாடும் வசன விளக்கமும் – ரூ. 30/–**
**சபை உடைதலை தடுக்கும் வழிகள் – ரூ. 120/–**
**சபை நிதி பெருகும் வழிகள் – ரூ. 70/–**

குறிப்பு:– அனைத்து கிறிஸ்தவ புத்தக நிலையங்களிலும் கிடைக்கும்
தொடர்பு எண்: 9442935233

## தொழுநோயாளிகளின் குழந்தைகள் இல்லம்

ஆந்திர மாநிலத்தில் இந்த இல்லம் 34 குழந்தைகளுடன் செயல்பட்டு வருகிறது. இவர்களின் பெற்றோர் தொழுநோயாளிகள் ஆனபடியினால் அவர்களால் வேலை செய்து இக்குழந்தைகளின் அடிப்படை தேவைகளான உணவு மற்றும் உடை போன்றவைகளை சந்திக்க இயலவில்லை. பள்ளிச் செல்லும் நாட்களில் மட்டும் இக்குழந்தைகளுக்கு பள்ளியில் மதிய உணவு வழங்கப்படுகிறது. ஆகவே இக்குழந்தைகள் காலையிலும் இரவிலும் உணவு கிடைக்காமல் பசியால் அல்லல் படுகின்றனர். இக்குழந்தைகளின் பரிதாப நிலைமைக் கண்ட எமது மிஷனரி மற்றும் சபையார் இக்குழந்தைகளுக்கு காலையிலும் இரவிலும் தங்களால் இயன்ற அளவு உணவு சமைத்து கொடுத்து உதவுகின்றனர். இருப்பினும் இந்த ஏழை சபையால் குழந்தைகளுக்கான உணவு தேவைகளை தினமும் சந்திக்க இயலாமல் சிரமப்படுகின்றனர். இந்த ஏழை குழந்தைகளுக்காக உதவும் இந்த சபையுடன் இணைந்து நீங்களும் உதவலாம். இக்குழந்தைகளுக்காய் உங்கள் தனி, குடு, சபை மற்றும் குடும்ப ஜெபங்களில் ஜெபிக்க அன்புடன் வேண்டுகிறோம்.

ஒரு குழந்தைக்கான மாத உணவு தேவை ரூ. 500/–
இக்குழந்தைகளை சந்திக்க மற்றும் உதவ விரும்புபவர்கள் தொடர்பு கொள்ளவேண்டிய எண்: 9443155120





ஆந்திர மாநிலம்
கிழக்கு கோதாவரி
மாவட்டத்திலுள்ள
ஒரு கிராம சபை
இந்த ஓலை குடிசையில்
கூடி வருகிறது.
சபை கட்டப்பட வேண்டிய
மிஷனரி பணிக்களம்

பணிக்களத்தில்
மிஷனரி பணியாளர்களுக்கு
புத்தாடை வழங்கி
உதவி செய்தல்.





ஆந்திராவில்
ஜனவரி மாதம் நடந்த
சபை அர்பண ஆராதனையில்
கலந்து கொண்ட விசுவாசிகள்



Editor : S. Moses Raj, (Mobile : 7502071054),
Published by : New Hope Mission,
75/33, Isaac St. Nagercoil - 629 001.
Contact : 9442935233
e-mail: newhopebharat@gmail.com
website : www.newhopebharat.org
Printed at : Latha Press, 9791659601